[24th January 1961

யாளத்திற்குச் சென்ற உத்தியோகஸ்தர்களால் ஏற்பட்ட காலி ஸ்தானங்களில் சீனியாரிட்டி அடிப்படையில் உத்தியோக உயர்வு கொடுக்க வேண்டும் என்று மத்திய சர்க்காரிலிருந்து வந்த உத்திரவின் அடிப்படையில் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இதர இலாகாக்களுக்குப் பொருந்தக்கூடிய உத்திரவு ஃபுட் அண்ட் அக்ரிகல்சர் இலாகாவிற்குப் பொருந்ாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கொள்கை பொதுவாக வகுக்கப்பட்டிருந்தால் எல்லா இலாகாக்களுக்கும் பொருந்தும், பொருந்தாத விஷயங்கள் இருந்தால் அதை அடிப்படையாக வைத்து ஏதாவது மாறுதல் ஏற்படலாம்.

*Library cess*

*1'2 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் 1959-ல் நூல் நிலையத்திற்கான செஸ் எவ்வளவு வசூலாகியது ?

(இ) இந்த இனத்தில் செலவாகிய தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Rs. 62,488–55 nP. for 1959–60.

(b) An expenditure of Rs. 1,80,256–34 nP. was incurred by the Local Library Authority during 1959–60.

SRI A. A. RASHEED : May I know whether the Government have paid any grant towards the extension of the Library service in the North Arcot district?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, under the Libraries Act

*Last Grade Servants*

* 143 Q.—SRI K. R. NALLASIVAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஈரோட்டிலுள்ள சர்க்கார் கடைநிலை ஊழியர்கள் கொல்லம் பாளையத்துக்கருகிலுள்ள புறம்போக்கு நிலத்தில் வீடு கட்டிக்கொள்ள நிலம் கோரி விண்ணப்பித்தனரா ?

(இ) அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) About 50 applications from the last grade Government servants and the low paid Government servants have been received by the local revenue authorities.

(b) The proposals for assignment are engaging the attention of the local revenue authorities.

24th January 1961]

SRI K. R. NALLASIVAM : மொத்தமாக சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதைப் பிரித்துக் கொடுத்து பட்டா கொடுப்பது எந்த அளவில் இருக்கிறது என்று தெரிந்து கொள்ள விரும்புகின்றேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU :As it is, there are 15 sites available, of which 6 sites are given to the school building. As already stated by me, there are 50 applications. For the others, some adjacent land is being looked for.

*Lower Bhavani Area*

* 144 Q.—SRI K. R. NALLASIVAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

கீழ்பாவானிப் பாசனப் பகுதிக்குள் ஆயக்கட்டில் சேராத நிலங்களை ஆயக்கட்டில் சேர்ப்பது என்ன நிலையிலுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : The Executive Engineer, Lower Bhavani Project Cannals Division, is taking action, on receipt of application from the ryots, to include, in the Lower Bhavani Project ayacut, such of the lands as were originally excluded owing to the unwillingness of the ryots but are so situate that the project water enters them either by percolation or by direct flow and/or are surrounded on all sides by the included block. The inclusion of the other lands which were excluded due to unwillingness of the ryots or due to extension of project ayacut to Dharapuram and Karur taluks will be considered after watching the development of the ayacut and the supply position for some years.

SRI K. R. NALLASIVAM : ஆயக்கட்டுப் பகுதியில் இருக்கக் கூடிய பகுதிகளில் நீர்க்கசிவுத் தண்ணீரை எடுத்துப் பாய்ச்ச சிறு சிறு திட்டங்கள் போடப்பட்டும் இன்னும் செய்யப் படாமல் இருக்கிறது. ஆகவே அந்தப் பகுதிகளை ஆயக்கட்டில் சேர்த்து போடப்பட்ட திட்டங்களை நிறைவேற்றுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கசிவினால் வரும் தண்ணீரை நல்ல முறையில் பயன்படுத்தத்தான் அப்பர் காளிங்கராயன் திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. அப்படி இருக்கும் போது இதையெல்லாம் எடுத்துக்கொள்வது நல்லதல்ல என்று நினைக்கிறேன். இதிலே நல்லதொரு முடிவு எடுக்கவேண்டும் என்றுதான் பரிசீலனைசெய்து கொண்டிருக்கிறோம்.

SRI K. R. NALLASIVAM : அப்பர் காளிங்கராயன் திட்டம் என்பது கீழ் பவானி கடைக் கோடியில் வரும் பகுதிகளுக்கான திட்டம். மேல் கோடியில் பயன்படுவதற்கு நீர்க் கசிவுத் தண்ணீரைப் பயன்படுத்தி சிறு வாய்க்கால் ஏற்படுத்த வேண்டு மென்று சொல்லப்பட்டது. அதை நிறைவேற்ற சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அதைப்பற்றிய பரிசீலனை செய்ய முயற்சி செய்யலாம்.